உ

வேதாந்தத் தமிழ் வாசகசாலை வெளியீடு

# ஸ்ரீ ஆதிசங்கரர் அன்பு மாலை

○

ஆக்கியோன் :

திருநீ. சண்முகானந்த சுவாமி,

ஆசிரியன்.

வேதாந்தத் தமிழ் வாசகசாலை

குடியேற்றம்.

பதிப்பாளர் :

ஷை வாசகசாலையார்.

1951.

○

கர — சித்திரை.

21-5

ஓம்

# முகவுரை.

இப்பரந்த வுலகின்கண் மக்களால் விரும்பப் படுவன :—இன்பத்தின் அடைவும், துன்பத்தின் நீக்கமுமாம். துன்பங்களனைத்திற்குங் காரண மெதுவோ, அது நீங்காமல், இன்பம் உளதாகாது. இதனைச் சாந்தோக்கிய வுபநிடதம் அடியில் வருமாறு பேசுகின்றது :—நாரதர், சனத் குமாரமுனிவரை நோக்கிச், "சுவாமின்! அடியேனைத்துன்பமில்லாதவனுகச் செய்தருளுவீர்" என்றூர். அதற்குச் சனத் குமார முனிவர், "இறைவன் துன்பமற்ற இன்ப வடிவன், அவனுக்கு வேறுனவையெல்லாம் துன்ப வடிவங்கள். காரணமாகிய அஞ்ஞானமும், அதன் காரியமாகிய வுலகும் வேறுகவுள்ளன வாதலால், அவை துன்ப வடிவங்களாம். காரணமாகிய அவ்வஞ்ஞானம் நீங்காத வரையிலும் துன்பமுமொழியாது. இவ்வஞ்ஞானம் மெய்ஞ்ஞானத்தால் நீங்கும். அம் மெய்ஞ்ஞானம், விசாரத்தால் உண்டாகும். "நான் யார்? இவ்வுலகம் எத்தகையது? இன்ப துன்பங்கட்குக் காரணம் யாது? இவை முதலிய ஆராய்ச்சியே விசாரம் எனப்படும். இத்தகைய விசாரமின்றி இன்பமடையவியலாது." எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

இவ்வுயர் நெறியாகிய வேதாந்த விசாரம், பண்டைநாளிற் சிறப்புற்று விளங்கியதென்பதை, நம் முன்னேர்களாகிய மெய்ஞ்ஞானிகளின் அனுபவத்தாலும், "நாம் பெற்ற வின்பம் இவ்வையகம் பெறுக" என்னும் உயர்நோக்கத்தால் அவர்கள் அருளிச்செய்த ஞான நூல்களாலும் நன்கு அறியலாம். "ஆத்மா சிரவணஞ் செய்யத்தக்கது,

மனனஞ்செய்யத்தக்கது, நிதித்தியாசனஞ்செய்யத் தக்கது" என்னுஞ் சுருதிவாக்கியம், கேட்டல், சிந்தித்தல், தெளிதலாகிய முச்சாதனங்களை விதித் துளது. இதனுல் வேதவாக்கியங்களெல்லாம், நேராகவோ அன்றிப் பரம்பரையாகவோ, அவ் வாத்ம ஞானத்தையே நிச்சயிக்கின்றனவென்பது செவ்வனே விளங்கும். கரும காண்டத்திற்கு உட் கரணத் தூய்மைவாயிலாகவும், பக்திகாண்டத்திற் குச் சித்தத்தின் ஒருமை வாயிலாகவும், அவ்வாத்ம ஞானத்தினிடத்தே கருத்தாம். ஆனுல் உபநிடத வடிவமாகிய ஞானகாண்டத்திற்கோ, நேராகவே, துன்பநீக்கமும் இன்ப வடிவமும் ஆகிய வீட்டி னிடத்தே கருத்தாம். இவ்வாறே மனு பகவான், பராசரர் முதலியோர் அருளிய அறநூல்களுக்கும், ஸ்ரீ வியாச பகவான் அருளிய, பிரம்ம சூத்திரம், இதிகாசம், புராணமாதியவற்றிற்கும், சீவப்பிரம ஐக்கிய ஞானத்தினிடத்தே கருத்தாம். அங்ஙனமே, ஸ்ரீ வான்மீகி முனிவரும், ஞானவாசிட்டத்தின்கண், இதிகாசங்கள் பலவற்ருல். இவ்வாத்ம ஞானத் தையே நிலைநாட்டியுள்ளனர். உலகியல் வாழ்க் கையே உயர் வாழ்க்கையெனக் கருதுகின்றவர்க்கு, இவ்வாத்மஞானக்கருத்து எவ்வாற்ருனும் தோன்ரு தென வுண்மையுணர்ந்தோர் கூறுவர்.

இங்ஙன்தொன்று தொட்டு நம் முன்னோர் களால் பயிலப்பட்டு வந்துள்ள ஆத்ம ஞானத் தையே, ஸ்ரீ, சங்கரபகவத் பாதாசாரிய சுவாமி களும், உபநிடத பாடியத்தாலும், பிரம்ம சூத்திர பாடியத்தாலும், கீதாபாடியத்தாலும், முக்கியவதி காரிகட்கு ஐயந்திரிவுகள் நீங்க மிகத்தெளிவாக நிலை நாட்டியருளினுர்கள். இக்கருத்தையுட்கொண்டே, ஸ்ரீ வியாசபகவான் சிவபுராணத்தில் "வேதங் களுக்குமாறுபாடுற்ற கருத்துகளை நிச்சயித்துத் துன்புற்ற வுலகமக்களைக் கண்ணுற்றுக், கருணை மேற்கொண்டு, கடவுளாரனைவருந்துதிக்க, ஸ்ரீ சங்

கரபகவானுகிய இறைவனே யுலகின்கண் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியரென அவதரித்து, உபநிடத முதலியவற்றிற்குப் பாடியங்களியற்றிச் சுருதிகளின் உண்மைக் கருத்துகளைத் தெளிவுறுத்தினர்.'' என அருளிச்செய்தனர்.

இறைவன் திருவுருவாம் மெய்ஞ்ஞானிகளின் வழிபாடே இறைவழிபாடாகுமென்பது, சான்றோர் கண்ட நெறியாகலின், ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகளைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டு, “ ஸ்ரீ ஆதி சங்கரர் அன்புமாலையெனப் பெயரிய விச்சிறு நூலையாக்கியுள்ளேன். வழிபடுவோன் சிறுமையைக்கொண்டே வழிபடப்படுவோன் பெருமையினையுணர வேண்டுமென்பது ஆன்ருேர் கொள்கையாகலின், அவ்வழிபாட்டு நெறியினையும், நீதி முறையினையும், அத்துவிதக் கொள்கைகளையும், இந்நூலில் ஆங்காங்கே காணலாம். குருவழிபாட்டின் பெருமையுணர்ந்த பெரியோர் குறைநீக்கிக் குணங்கொள்வாராக. சற்குருவின் திருவருட்பெருமையை யுணர்ந்து, இந்நூலைப் பதிப்பித்து அன்பர்கட்கு அளிக்கமுன் வந்த, வேதாந்தத் தமிழ் வாசகசாலையாருக்கு, என் நன்றியென்றும் உரியதாகுக.

இங்ஙனம்,

**ஆக்கியோன்.**

---

# பதிப்புரை.

நாட்டி னியல்பு வழுவாமல் நட்டோர்க் கித மாம் நற்பொருள்கள், ஈட்டி முன்ன மதனலே யினிய குணத்தி லுயர்ந்தோரைக், கூட்டி யவரால் நிராசையினைக் கூடி யதனல் விசாரத்தைத், தீட்டி யதனல் மெய்ஞ்ஞானந் தெளிந்தால் முத்தி சித்திக்கும். — வாசிட்டம்.

என்னுந் திருவாக்குகளால் வாசிட்டமென்னும் ஞான சாத்திரத்தின்கண். திட அபரோக்ஷ ஞானியாராகிய ஸ்ரீ வசிட்டமுனிவர் ஸ்ரீ இராக வற்கு அத்துவித ஞானநெறியினை நினைவூட்டினர். இக்கருத்தையாராய்வதன் முன்பு உபநிடதமாகிய வேதாந்த நெறியினையும், சிறிது நினைவிற்குக் கொண்டுவருதல்வேண்டும். அஃதெங்ஙன் எனின் அகண்ட சச்சிதானந்த சுயம்பிரகாச அசங்க மாயுள்ள பிரம்ம வஸ்துவானது சுத்தமாயிருப்ப தால் இப்பிரபஞ்சத்திற்குக் காரணமாகாது. இத் தகைய சுத்தசேதனத்தை அனதியாயும், ஒன்று யும், ஞானத்தால் அழிவதாயும் சதசத்துக் களுக்கு வேருயும், சத்துவம் ரஜசு தமசு, என்னும் முக்குணவடிவமாயுமுள்ள மாயாசக்தி ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றது. ஈண்டுச் சுத்த சத்துவ குண வடிவ மாயையிற் பிரதிபிம்பனும், சர்வஞ்ஞனும், சர்வ சத்திமானும், சுவதந்திரனும், வியாபகனும், நித்தியனுமாகிய ஈஸ்வரனே, பிரபஞ்சத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரணமாவன். குடங்கள் பலவற்றிலுள்ள நீரிற் பிரதிபிம்பிக்குஞ் சூரியன் ஒன்றேயாயினும், பிரதிபிம்பங்கள் பல வாய்த் தோன்றுதல் போல, அந்தக்கரணங்கள் பலவற்றிற் பிரதிபிம்பிக்குஞ் சேதனம் ஒன்றே யாயினும், அவற்றிற் பிரதிபிம்பராகிய சீவர் பலரேயாவர். எவ்வந்தக் கரணத்திலஞ்ஞான

முண்டோ, அவ்வந்தக் கரணத்தோடு கூடிய சீவனுக்குப் பந்தமுண்டு. அச்சீவனே புண்ணிய பாவ கருமங்களைச் செய்து இன்ப துன்பங்களை நுகர்ந்து பிறப்பு இறப்பாகிய சம்சாரத்திற் சுழல்வான். எவ்வந்தக் கரணத்திலுள்ள அஞ் ஞானம் மெய்ஞ்ஞானத்தால் நீங்கியதோ, அச் சீவனே முத்தனுகின்ருன். இங்ஙனே பந்தமுத்தி கட்கு ஞானுஞ் ஞானங்கள் காரணங்களாகின்றன. ஞானமுதிக்கப்பெற்ற அத்தத்துவ ஞானி, இப் பிரபஞ்சத்தைத் தனது உண்மை வடிவமாய பிரம்மமாகவே காண்பன்.

இனிவாசிட்டக் கருத்தைத் தொகுத்து ஆரா யும் வழி, பிறவாச் செல்வமாகிய விதேக முத்தி யானது, சீவப்பிரம்ம ஐக்கிய நிலையை, விட்டு விடாத இலக்கணையாற் சாதிக்கும் அத்துவித ஞானத்தானன்றிப்பிறிதோர் நெறியானுமடையப் படமாட்டாதென்பது உள்ளங்கை நெல்லிக்கனியே போன்று தெளிவாகும். மேற்சிறிது வகுத்து நோக்கின், அம்மாண்புறு செல்வத்தை யெய்து வதற்கு, முதற்கண் நித்திய கருமானுட்டானமும், அதனல் புண்ணிய வளர்ச்சியும், பாவநீக்கமும்; அவைபற்றி உள்ளத்தூய்மையும், மித்தையாகிய வுலகப்பொருள்களிற்ருேடங் காண்டலும், அவை காரணமாக விடய வைராக்கியமும், முத்தியிற்பெரு வேட்கையும், வெளிக்கரும நீக்கமும், அவைவாயி லாக யோகப்பழக்கமும், தனையுணரும் இச்சையும், சற்குருவாலுணர்த்தப்பட்ட "தத்துவமசி" மகா வாக்கியத்தின் இடைவிடா விசாரமும், அவை யேதுவாகத்திட அபரோக்ஷ ஞானமும், அஞ்ஞா னத்தின் நீக்கமும், துவிதப்பிராந்தியின் அழிவும், விருப்பு வெறுப்பின்மையும், காரணகாரிய முறை யானே அதிகாரிகளால் வேண்டப்படுவனவா மென்று அறிதலோடு, துன்பத்தின் நீக்கமும், இன்பத்தின் அடைவுமாய பிறவாச்செல்வம்

எய்துறுமென்பதையும் வெள்ளிடை மலையெனத் தெள்ளிதின் உணரலாம்.

இத்தகைய அத்துவித ஞானத்தைப் பெறத் துணைக்கருவியாயும், தூயவழி காட்டியாயுமுள்ளது, வேதத்தின் அந்தபாகமாகிய வேதாந்தமென்னும் உபநிடதமேயாகும். அவ்வுபநிடதப் பொருளைத் தொகுத்துத்திகழ்த்துவது, ஸ்ரீ வேதவியாச முனிவரர் அருளிச்செய்த பிரம்ம சூத்திரமென்னும் பெருங்கலையாகும். அதற்குப் பேருரை காணத் துணிந்து, கண்டபெரியோர் பலருள்ளும், அச்சூத்திரத்தின் உண்மைக் கருத்துகளைச் சுருதியுக்தி அனுபோக வாயிலாகவும் ஐயந்திரிபின்றியும் கடா விடைகளான் விளக்கிச் சீவப்பிரம்ம ஐக்கிய நெறியேஉயர்ந்த தத்துவப்பொருளென்று அனுக்கிரகஞ் செய்தருளிய, சிவனுருவாம், ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசாரிய சுவாமிகளை உலகம் என்றும் போற்றி வழிபடக்கடமைப்பட்டுள்ளது என்பது தத்துவஞானிகளின்றுணிவு. அப்பிரம ஞானியின் வழிபாட்டு முறையை விரித்தும், வரலாற்று முறையை வகுத்தும், அத்துவித நெறியினைத் தொகுத்தும், இந்நூல் விளக்குகின்றது என்பதைக்கூர்ந்து நோக்குவோர் நன்கறிவர். சற்குரு வழிபாட்டினுல் இறைவழிபாட்டின் பயனும் உடன் அடையப்படுமென நூல்கள் கூறுகின்றமையின், இந்நூற் கருத்தைப்போற்றி, ஸ்ரீ ஆதிசங்கரபரம சற்குருவின் திருவடித்தாமரைகளில் நங்கருத்தையாக்கி, அப்பெருமானின் திருவருட்டுணையால் பேரின்பத்து ஆழ்வோமாக.

இங்ஙனம்,

**பு. கா. கங்காதர முதலியார்,**

செயலாளர்,

வேதாந்தத் தமிழ் வாசகசாலை, குடியேற்றம்.

# மதிப்புரை.



காார்க்கூர். ஸ்ரீ இராமாஸ்ரமம்

## திருமிகு. சிவராசானந்த சுவாமிகளவர்கள்.

மக்கள் துன்பஞ் சிறிதுமின்றி இன்பவடிவமாக விளங்குதற் பொருட்டுப் பரமேசுவரன் நேரே கூறிய வேதத்தின் ஞான காண்டமாகிய வுபநிடதமும், கிருஷ்ணவதாரங்கொண்டு கூறிய, ஸ்ரீமத் பகவத்கீதையும், வியாசாசாரியர் வடிவங்கொண்டு கூறிய பிரம்ம சூத்திரமும், பிரஸ்தானத்திரயமெனப்படும். இம்மூன்று ஞான சாத்திரங்களும் தலைமைபெற்று விளங்குவனவாம். இம்மூன்றிற்கும், சிவபெருமானின் அம்சமாய்த் திருவவதாரங் கொண்டெழுந்தருளிய, ஸ்ரீ சங்கரபகவத் பூஜ்ய பாதாசாரிய சுவாமிகள், யாவருஞ் சர்வதுக்க நிவிர்த்தி, பரமானந்தப் பிராப்தி வடிவமாகிய முத்தியடையுமாறு, அத்துவித பரமாக விரிவுரையருளிச்செய்துள்ளார்கள். அவ்வாசாரிய சுவாமிகளைத் துதித்துத் திருவருள் பெற்றுய்யக் கருதிக், குடியேற்றம், வேதாந்தத் தமிழ் வாசகசாலை, ஆசிரியர், ஸ்ரீமத், திருநீ, சண்முகானந்த சுவாமியவர்கள், "ஸ்ரீ ஆதிசங்கரர் அன்புமாலை" என்னுஞ் செந்தமிழ் நூலை இயற்றியுள்ளார்கள்.

இந்நூலில், ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகளை வழிபட்டுய்வதற்கான நெறிகளையும், அப்பெரியாரின் மகிமைகளையும், சரித்திரக்குறிப்புகளையும், அத்துவிதக் கொள்கைகளையும், கண்ணுற்று மகிழ்வெய்தினேன். இவ்வரிய நூலை அச்சியற்றி யாவரும் பயனடையக் கருதியுதவிய ஷை வாசகசாலையாரின் பேருபகாரத்தைத் தமிழுலகம் எஞ்ஞான்றும் நினைவிலிருத்திப் பாராட்டக்

கடமைப்பட்டுள்ளது. இந்நூற்பொருளை ஆர்வத்தோடு கற்றுணரும் அன்பர்கட்கு, ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகளின் திருவருள் முன்னிற்குமாக.

---

காஞ்சிபுரம், செந்தமிழ் விரிவுரையாளர்,

**வித்துவான்**

**திருமிகு, மே. வீ. வேணுகோபாலப்பிள்ளையவர்கள்.**

விருத்தம்

ஆதிசங் கரர்பா லன்பினன் மாலை
யாக்கிய நற்றவப் பெரியோன்
சோதிதங் குளத்தன் சண்முகா னந்தன்
தொன்முது புலமைசா லொழுக்கன்;
பேதியா வுளத்திற் றந்தநா லிதுதான்
பெரும்புவி வாழுநர் மனக்கோர்
வேதியா மென்ன விளங்கியெவ் வெவர்க்கும்
விழுப்பய னுதவுமிங் கினிதே.

---

திருவனந்தபுரம், வேதாந்தவிரிவுரையாளரும்,

இருமொழிப் பேராசிரியருமாய,

பண்டித. **திருமிகு, இராமசுப்பிரமணியநாவலர்** அவர்கள்

நேரிசையாசிரியப்பா

மலர்தலை யுலகு மல்குயி ரனைத்து
மிலகிறை விளக்க மிறையை யன்றி
யாது மின்று மெனுமத் துவைதக்
கோதில் கொள்கை குலமறை யகத்து
மந்திர விளக்கின் மாட்டிய ஞான

சுந்தர நெய்யிற் ஞெல்லனு பவத்திண்
டிரியிடை மிளிருந் தெய்வச் சுடரென
வொருதனிச் செம்மையி னுற்றுணர்ந் துலகெலா
மங்கி கருக வளவிய மாயைக்
கங்குல் கடந்து கனவிய மோன
வெட்ட வெளியின் மேவிப் பிறவி
தொட்ட மாசு தூவறக் கழீஇப்
போதாந் தத்தின் பொருட்பயன் கெழுமிய
வேதாந் தத்தின் விளங்கிடு மின்ப
மருவி மீளா வாழ்விடை நிலீஇய
ஒழுக்கினும் பனுவ லுரையினு மன்பதைக்
கிழுக்கமின் றுணர்த்திய வினையறு மாசா
ஞதி சங்கரற் கன்பு மாலை
நீதி னிகழ்மறை நெறிபொரு ளுட்பமுட்
சத்துவ மரபுந் தனிக்கதி யடைவுந்
தத்துவ வியல்புந் தந்திர வடிவுற
வினிமையு மென்மையு மெளிமையு மியையும்
புனித மேன்மையும் பொருந்தவுள் ளன்பின்
நெகிழ்ந்த கிளவி நேரிய பஞ்சிற்
புகுந்த புலமைப் பொருந்துகை வினையிற்
செய்தன னென்ப செந்தமிழ்த் தாயின்
பொய்தல் முற்றும் புரையற வுணர்ந்தவன்
ஆடும் பொழிலுக் கருங்கவின் செய்து
நீடும் புகழி னிலைபெற வோங்கி
வகையார் துறவின் வயங்குந்
தகைசால் புலமைச் சண்முகா னந்தனே.

---

ஆம்பூர்: செந்தமிழ் விரிவுரையாளர்,

**பண்டித. திருமிகு, ஆ. மா. சிவஞானமுதலியாரவர்கள்**

## விருத்தம்

பொங்கர விதழி புனன்மதி விரவு
புரிசடை கரந்தரு ளாதி
சங்கர னெமையா ளடிகனல் லடிக
டமைநினைந் தனைவரு மினிதே
வெங்கர வுறுத்தும் வினைத்துய ரிரிக்க
விளங்குசொன் மாலைவேய்ந் தனன்சீர்
தங்கர னறவோன் சண்முகா னந்தன்
தனதெழில் சாற்றுதற் கெளிதோ.





ஓம்

# ஸ்ரீ ஆதிசங்கரர் அன்பு மாலை.

---

## காப்பு

வெண்பா

பூந்துளவ னேத்து புகழாதி சங்கரனைத்
தீந்தமிழாற் செப்பிச் சிறப்புறவே—சாந்தப்
பெருங்கருணை யானைமுகப் பெம்மானற் சந்த
இருங்கழலை யேத்திடுவா மிங்கு.

சற்குருதுதி

காலங் கடந்த கழலாதி சங்கரனைச்
சீல முறத்தமிழாற் செப்பவே—கோலமுறப்
பண்டங் கெனையாள் பரமன் குருநீல
கண்ட னடிக்கமலங் காப்பு.

அவையடக்கம்

மலையசைக்க வெண்ணு மதியிலென்புன் சொல்லைக்
கலையிசைக்குங் கண்ணுடையார் காப்பர்—
சிலைவளைக்குஞ்
சங்கரன் றன்னுருவாய்ச் சார்ந்தபுக ழாதிகுரு
சங்கரனைச் சொல்வதறிந் தால்.

## நூல்

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்னெடுங் கயிலைப் புனிதனிங் குள்ளார்
பொருந்திடா திருக்கவெம் பிறவி
பன்னெடுஞ் சந்தக் கலையெலா மொன்றாய்ப்
பரித்திவண் வந்தன னென்றால்

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

மின்னிக ருடலை மெய்யெனும் புலையேன்
மேவிநின் புகழ்சொலற் பாற்றோ
தன்னிக ரில்லாச் சம்புவே ஞானச்
சங்கரா சார்யநற் றவனே. 1

இணையெனப் படுவோ ரெவருமில் பெரியோய்
இடையறு விருந்தவ முடையோய்
புணையெனப் படுவோய் புந்தியிற் கருதும்
புண்ணியர் பவக்கடல் கடக்க
அணையெனப் படுவ தொன்றுமில் கருணை
யாழியா யடியவர் தமக்குத்
தணிவிலா ஞானந் தந்தருள் பரமா
சங்கரா சார்யநற் றவனே. 2

உலகெலா முணர்ந்திங் குறைகுவோய் நின்னை
யுணர்ந்திடற் கொன்றுமில் லறவோய்
அலகிலா மேலா யமர்குவோய் நின்னை
யமிழ்த்திட மேலதொன் றில்லோய்
தொலைவிலாப் பொருளே தூயநற் சோதி
துலங்குநின் மலப்பெரு வாழ்வே
தலையினு லான்றோர் தாழ்ந்திடற் குரியோய்
சங்கரா சார்யநற் றவனே. 3

தேசிகோத் தமனே செழுமறைக் கொழுந்தே
திருந்துநற் கலைக்களஞ் சியமே
மாசிலா மணியே மன்னரின் மன்னே
மகிதலத் தவர்புகழ் பொன்னே
கூசிடா தியற்றுங் கொடும்பழி யவரைக்
குறுகிடாக் குணப்பெருங் குன்றே
தாசரென் றவர்க்குத் தண்ணருள் சுரக்குஞ்
சங்கரா சார்யநற் றவனே. 4

தொகைப்படு மமரர் சூழ்ந்துவந் தித்துத்
தொழுதகை சிரமிசைக் குவிய

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

வகைப்படு மரம்பை மங்கையர் நடிக்க
வதியுமிந் திரன்பதம் வேண்டேன்
நகைப்படு நின்றன் நளிமல ரடியை
நாயினே னணுகுமா றுளதோ
தகைப்படுமேலார் தாங்குநல் லடியாய்
சங்கரா சார்யநற் றவனே. 5

மிகத்திகழ் வேதப் பொருளினை நன்றாய்
விளக்கியிங் கிழுக்கமில் லடியார்
அகத்திருள் கடியு மருணனே யைவ
ரடங்குநல் லருட்பெருங் கடலே
இகத்தினிற் பெரியோ ரேத்துநின் கழலை
யெளியனே னேத்துமா றுளதோ
சகத்தினுக் கன்னை யாகியு மிருந்தாய்
சங்கரா சார்யநற் றவனே. 6

ஐயநின் பவனி கண்டநாள் தொட்டே
யழகமர் நின்றொடை வேட்டு
நையுநுண் ணிடையாள் நலமழிந் தடங்கா
நடுங்கஞர் கொளலறிந் திலையோ
துய்யமெய் வியாதன் சொற்றசூத் திரத்தின்
துணிபொரு ளொன்றெனத் துணிந்த
சைவநா யகனே சற்சனர்க் குறவே
சங்கரா சார்யநற் றவனே 7

ஓதுமெய்ப் பிரம மொன்றலா லுலக
முளதிலை யென்றுசொல் வேதக்
கோதிலா நெறியைக் குறித்துணர் கில்லாக்
குவலயத் தவர்தமக் கிரங்கி
ஏதமில் லுரையை யிசைத்தசற் குருவே
யிழுதையேற் கிரங்குநா ளுளதோ
சாதலுண் டாதல் தணந்தசிற் பரமா
சங்கரா சார்யநற் றவனே. 8

ஐந்தொழி லியற்று மாதியே நின்றன்
அடித்தலத் துலகெலாந் தோன்றிப்
பந்தியா யொடுங்கு மென்றுபன் மறையும்
பகர்ந்திடும் பரிசினை யுணர்ந்தேன்
கந்தநற் கழலைக் கைதவர்க் களியாக்
கற்பக மொத்தநின் னருளைத்
தந்தெனை யாள்வாய் சற்குணக் குன்றே
சங்கரா சார்யநற் றவனே. 9

அன்னைநீ ராட வன்றுமா நதியை
யழைத்தரு ளையனே யன்பர்
முன்னமர் வினையு முதுபவத் துயரு
முடியநல் லருட்டிருப் பார்வை
பின்னமின் ஞானம் பிறங்கவிங் கீந்து
பெரும்புக ழீண்டவாழ்ந் தவனே
தன்னைநே ரில்லாத் தனியருட் குன்றே
சங்கரா சார்யநற் றவனே. 10

வார்சடைப் பெருமா னென்றுனை மண்ணோர்
வழுத்துவ தறிந்துமின் றமிழால்
நார்படு முளத்தால் நின்புகழ் நாயேன்
நவின்றிடா திருந்தன னந்தோ
கார்நிறத் தவனுங் கஞ்சநற் றவனுங்
கைதொழு தேத்திடுங் கண்ணே
தார்படுங் கழலைத் தாழ்ந்தவர்க் கருளுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 11

சிவ்குரு வெனுமோர் செழுமறை முனியுந்
திருமிகும் பகவதிப் பனியும்
பவமிலா நின்னைப் பாரினன் கடைவான்
பண்ணுநற் றவமெனக் குறையாய்
அவமெலா மியற்றி யவனியிற் பிறந்தே
யலையுமெற் கருடரு குவையோ
தவமுறு மடியார்க் கருள்சிவப் பழமே
சங்கரா சார்யநற் றவனே. 12

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

தோடகர் பத்ம பாதரு மவனி
துதிபிர பாகரர் மதலை
ஏடவிர் தார்மண் டனர்முதற் பெரியோர்
இசைமிகு நின்கழ லடைவான்
பாடமர் புவியிற் பண்ணுநற் றவத்தைப்
பன்னுத லிங்கெமர்க் கெளிதோ
தாடலைத் தருவான் வந்தசற் குருவே
சங்கரா சார்யநற் றவனே 13

கற்பைநற் பொற்பாய்க் கருதுபார்ப் பனியின்
கடியகத் தெங்குநன் னெல்லிப்
பொற்கனி மழையைப் பொழியுமா செய்த
புண்ணியா நின்னடித் தொழும்பில்
அற்புமிக் குறுவா னருளியிவ் வுலகி
லாட்கொளு நாளுமிங் குளதோ
சற்குரு வெனவே தாழ்ந்தவர்க் கருள்செய்
சங்கரா சார்யநற் றவனே. 14

நலமிகு மறங்க ளிரண்டினு ஞானம்
நண்ணுமென் றிசைப்பினுங் கலைகள்
பலமிகுந் துறவே பயிலுமின் பக்குப்
பகரிட மெனுமறை மொழியைப்
புலமிகக் கருதிப் புன்கரா வடியைப்
புல்லுமா செய்துநல் லன்னை
தலமதிற் புகலச் சார்பெருந் துறவோய்
சங்கரா சார்யநற் றவனே, 15

திருவருட் சிவமாய்த் திகழ்ந்தனை யெனினுஞ்
சீர்மிகுந் திருந்தவர் முன்னுட்
பெருவழக் கதுவாய்க் கொண்டன ரெனவே
பெருந்தவக் குருவினைத் தேடி
நருமதைக் கரையி னண்ணுகோ விந்த
நாதனங் கருள்செயப் பெற்றுய்
தருநிதிக் கொடைகா லடியினிற் சனித்த
சங்கரா சார்யநற் றவனே. 16

சூழ்வினைக் கொடியேன் றாயநின் னடியைச்
சூழ்ந்திடா திருப்பது மன்றி
யூழ்வினை வயத்தா லுணர்விலா ரீட்டத்
துற்றுநல் லுளமிக வுடைந்தேன்
பாழ்வினை கழியப் பண்ணுமெஞ் ஞானம்
பற்றுநா ளென்றுகொல் லுரையாய்
தாழ்வினை குயிற்றுந் தகவிலார்க் கெதிராச்
சங்கரா சார்யநற் றவனே. 17

மகத்தினுக் கரையன் மன்னியன் ஞெருநாள்
மலிமுது கென்பினை யிரக்க
இகத்தினிற் றதீசி யெழின்முனி யீந்த
வியல்பினுக் கொத்துநின் றலையை
அகத்தினை யேற்றகா பாலிகற் கீவான்
அகமுற விசைந்தனை யந்தோ
சகத்தினுக் கிறைவ னுகுநன் மணியே
சங்கரா சார்யநற் றவனே. 18

வினைவழிச் சிறுவன் விண்டநல் லுயிரை
விழிப்புறச் செய்துவாய் திறவாக்
கனைகழற் சிறுவ னுபநிடப் பொருளைக்
கழறவங் கருள்செயுங் கதியே
புனைமலர்த் தொடையா லுனையலங் கரிக்கும்
பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்
தனையடைந் தவர்க்குத் தத்துவந் தெரிக்குஞ்
சங்கரா சார்யநற் றவனே 19

கருமநற் பலத்தின் கட்டறுத் தரிதிற்
கடுந்துற வெய்துகா தலனை
பெருமைநற் றந்தை தாழ்ந்திடற் குரியன்
பிறங்குமத் துறவியோ வனையின்
அருமைநல் லடிவீழ்ந் தன்புறன் மரபென்
றருமறை சாற்றுமங் கதனல்
தருமநற் ரூயின் றண்பதந் தாழுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 20

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

அன்னையிற் சிறந்தோ ராலய மிலையென்
றருளுநல் லன்னை தன் ·னுரையை
மன்னுசெம் பொருளை மதித்தவந் தணநீ
மதித்தனைக் காகுநற் கடனைப்
பின்னமில் நெறியாற் பிறங்கவங் காற்றிப்
பெருநெறி பூண்டனை யந்தோ
தன்னையிவ் வுலகந் தாழ்ந்திடற் குரியோய்
சங்கரா சார்யநற் றவனே. 21

அன்றுசூத் திரத்திற் கருளுபா டியத்திற்
களித்தநல் லுரையினை யம்மான்
பொன்றவக் கினியிற் புகுத்தவங் கதனுற்
புழுங்குதா மரையடித் தலத்தோற்
குன்றிரு வாயாற் பஞ்சபா திகையா
யுரைத்தனை யூனமில் பெரியோய்
தன்றுணைக் கழலைத் தந்தெனை யாள்வாய்
சங்கரா சார்யநற் றவனே. 22

துன்பினுக் குறையு ளாகுபுன் றுவிதந்
தொலைவிலத் துவிதமிங் கிரண்டில்
என்பெருக் கணிவோ யாதுசத் தியமென்
றிசைத்ததற் கெழின்மரு தீசர்
அன்புருக் கொளுமத் துவிதமெய் யென்றே
வருள்செயக் கேட்டவந் தணனே
தன்றிருக் கருணை தலமெலாம் பரவுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 23

தற்பிர மாணம் பரப்பிர மாணந்
தம்மிலிங் கெதுதகு மெனவே
இற்புறஞ் சுகங்க ளிசைக்குநற் கரும
வியலுறு மண்டனர்க் கிரங்கிப்
பற்பல விதமாம் பரிசினில் ஞானப்
பண்புரைத் தகவிரு ளகற்றிச்
சற்குரு வெனவந் தாண்டசிற் பரனே
சங்கரா சார்யநற் றவனே. 24

வாமநல் வாணி வயங்குசொற் போரில்
வாடநற் றிருவுளத் தெண்ணிக்
காமநூற் கலையைக் கருதியங் கமரு
கன்னுடற் கலந்தர சாட்சி
ஏமமிக் குறவே யியற்றுநல் லரசே
யேதமில் தும்பைநற் கொன்றைத்
தாமநன் முடியாய் சாதமில் லடியாய்
சங்கரா சார்யநற் றவனே. 25

முத்தமிழ்க் குரவ னென்றுல கெல்லா
மொழிந்திடு மகத்திய முனிவன்
தத்துமக் கடலைத் தளிர்க்கர மிருத்துந்
தகையினை யொப்பநீ யொழியா
முத்துநீர் பெருகு முதுநரு மதையை
முந்தைநாட் கரகமங் கிருத்துஞ்
சத்தியை யாரே தரிப்பவ ரையா
சங்கரா சார்யநற் றவனே. 26

அன்றுநற் காசி யருநகர்க் கிறையோ
னணுகிநூற் சங்கைசெய் திடவே
துன்றுமெய் நோக்கிற் றொழும்ப னற்சீவத்
துவமதை நோக்கினின் கூறே
சென்றொழி வில்லாச் சிவமதை நோக்கிற்
சீர்மிகும் யானுமுன் னுருவே
தன்றுணை யற்றோ யென்றுமுன் சாற்றுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 27

செங்கையிற் சங்கன் றிருவவ தாரச்
சீர்மிகும் வியாதநன் முனிவன்
துங்கநற் பிரம சூத்திரத் திலகுந்
தொகுபொருள் வினவிடப் பகர்ந்தே
அங்கவன் மகிழ வருட்டுதி முழக்கி
யவனருள் செயவமர்ந் தனையே
சங்கையில் ஞானக் கலைவலோய் மோனச்
சங்கரா சார்யநற் றவனே. 28

குருவருள் மொழியை மறுத்ததோ டத்தைக்
குலைத்திடக் கருதிநெல் லூமியின்
பருவரற் றீயாற் பரிந்தகற் பட்ட
பாதருக் கருளுபண் ணவனே
கருவினி லினியுங் கலந்துழ லாது
கடையனே னின்பத மடைவான்
தருணமிங் குளதோ சாந்தசற் குணனே.
சங்கரா சார்யநற் றவனே. 29

முடைப்பெரு நாற்றக் கடைப்படு முடலை
மூவருந் தங்குநோய்க் குடிலை
நடைப்பிண மதனை நம்பியிங் கடியே
னலிவுற னீங்குநா ளுளதோ
கொடைத்திரு வேந்தன் குறுகநல் லருள்செய்
கொற்றவா முற்றுநற் றுறவோய்
சடைச்சிவ மணியே தண்டமிழ்க் கடலே
சங்கரா சார்யநற் றவனே. 30

வாதரா யணசூத் திரமதற் கன்று
வலிந்துபே தப்பொருள் வரைந்த
கோதிலா நீல கண்டரன் றன்னைக்
குறுகிவா தஞ்செயத் தோல்வி
ஏதமில் நெறியே யேற்றன ரென்றால்
எந்தைநின் புகழ்சொலற் பாற்றோ
சாதலிங் கில்லாத் தனிமறைக் கடலே
சங்கரா சார்யநற் றவனே. 31

பீடுறும் பிரம சூத்திர மதற்குப்
பெரும்பழி யபிநவ குப்தன்
பாடுறுஞ் சத்தி பரமதா வியற்றும்
பழுதுரை மறுக்கவங் கவனுங்
கூடுபுன் னேவல் குயிற்றலான் மூலங்
குறுகநல் லசுவினி குமரர்
சாடவந் நோயைத் தவிர்ந்தநின் மலனே
சங்கரா சார்யநற் றவனே. 32

காசுமீ ரத்திற் கலந்தபா ரதியின்
கனமிகு மண்டபத் திடையின்
தேசமர் தெற்கின் றிருவுடை வாயில்
திறந்துநற் பீடமங் கேறி
ஆசமர் மதவா திகடமை யாங்கே
யடக்கியின் னருளவர்க் கருளித்
தாசரென் றவர்க்குத் தண்ணருள் சுரக்குஞ்
சங்கரா சார்யநற் றவனே. 33

சீரணி யுலகந் திருந்திடற் கெண்ணிச்
சிவன்றிரு வுருவமாய்ச் செனித்தே
பாரணி குருவாய்ச் சரித்துநல் லபேதம்
பகர்ந்தநற் பரமனே நின்றன்
நேரணி கழலை நீசனேற் கருளி
நித்தியப் பொருடரு குவையோ
தாரணி கொன்றைத் தலைவமங் கலமாஞ்
சங்கரா சார்யநற் றவனே. 34

அணிந்திடு பணியு மரியநல் லுடையு
மறுசுவை யூணுமிங் கடைவான்
துணிந்திடு மெனைநின் றாயபொன் னடியைத்
துணியுமா றருளுநா ளுளதோ
பணிந்திடு மயன்மா லமரரே முதலோர்
பழுதகல் பெருமைக ளனைத்துந்
தணிந்திட நிவந்து நின்றதற் பரனே
சங்கரா சார்யநற் றவனே. 35

அஞ்சலென் றெனையு மாண்டுநின் னடியா
ரவையதிற் கூட்டி நன்னெறியில்
நெஞ்சமிங் கியைந்தே சரிக்குமெய்த் தவரின்
நேசமிங் களிக்குநா ளுளதோ
கஞ்சனற் றலையாற் றூங்குமின் கழலோய்
கவையிலாப் பிரமசத் துணர்வோய்
தஞ்சமென் றவருக் கிரங்குநல் லருளோய்
சங்கரா சார்யநற் றவனே. 36

ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

குணமுநற் றமிழின் சுவையுமிங் கறியாக்
குலமிலாச் செல்வரைப் பாடி
நிணமுடன் றசையா னெருங்குபுன் குடிலை
நீணிலத் தேந்திமிக் குடைந்தேன்
கணமுநின் கழலிற் கருத்திலாக் கயவன்
கதியுமிங் கடையுநா ளுளதோ
தணவிலாக் கருணைச் சச்சிதா னந்த
சங்கரா சார்யநற் றவனே. 37

குடைநிழ லமர்ந்தே குவலய மனைத்துங்
கோதிலா தாளுகொற் றவராய்
இடையரு திருந்தே யிளைப்புறு மதனில்
இலங்குநின் றொண்டருக் கேவல்
தடையிலா தியற்றித் தனையுணர் ஞானஞ்
சாருத லன்றெனத் தெளிந்தேன்
சடைநிலாக் கங்கை தணந்துமண் வந்தோய்
சங்கரா சார்யநற் றவனே. 38

நின்றிரு வடியை நோக்குகட் புலனும்
நினையுணர் நெஞ்சமு நினையே
என்றுமிங் கிசைக்கு மேதமில் நாவு
மிழுதையேற் கருளிமெய் யதனில்
துன்றுநோ யனைத்து மொழித்து மேல்வருமெய்
தொலைக்கநின் றிருவடி யடைந்தேன்
தன்றிருக் கழலைத் தோடகர்க் கருளுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 39

வேணவா வகன்ற மெய்த்தவ ரிடத்தும்
மெய்யினை மெய்யென வுணர
நாணுவா ரிடத்தும் நண்ணியிங் கடியேன்
ஞானமுற் றிடவருள் புரிவாய்
சேணுலாம் புகழைத் தனதகத் தடக்குஞ்
செல்வனே மாலயர்க் கிரங்கித்
தாணுவா யெழுந்த தனிப்பெருங் கருணைச்
சங்கரா சார்யநற் றவனே. 40

நீங்கிய நேயத் தவர்க்கறி வரிய
நின்கழ லடைகுவா னவத்தால்
ஓங்கிய வடியேன் விரைந்தன னந்தோ
வொண்டிரு மறையினற் பொருளால்
தேங்கிய வுளத்தார் தெரியுநற் பொருளே
சித்சுக வடிவசத் துருவைத்
தாங்கிய மனத்தா லோங்குசற் குருவே
சங்கரா சார்யநற் றவனே. 41

பொன்னிடத் திருக்கு மணியென விருந்து
புண்ணியர்க் கருளுநின் கழல்கள்
என்னிடத் திரும்பி லிருந்தநன் மணிபோ
லிருந்தருள் செய்யுமோ வியம்பாய்
பின்னிடும் படிபுன் மதக்கடல் கடந்து
பெருகுநல் மாமறைக் கடலைத்
தன்னிடத் தடக்குஞ் சதுரமே தையனே
சங்கரா சார்யநற் றவனே. 42

திங்கணற் பகலோன் றிருந்திய மானன்
றிகழ்தரும் பூதமிங் கெட்டும்
பொங்குநின் னுருவாய்ப் பொலியுநீ யடியேன்
புலையிருள் நீக்குநா ளுளதோ
கங்குலும் பகலுங் கடக்குநின் வடிவைக்
கண்டவர்ப் பணியுநல் லவர்க்குத்
தங்குமெய்ஞ் ஞானந் தருபரம் பொருளே
சங்கரா சார்யநற் றவனே. 43

நாவினேந் தெழுத்தை நவிலுவோர் தமையும்
நற்றமிழ் மொழியெடுத் தன்பாற்
பாவினு லுன்னைப் பழிச்சுவோர் தமையும்
பணியுநா ளென்றுகொல் லுரையாய்
சேவினு ரழியச் செய்தபுன் னகையாய்
திருவம ரம்பல முடையாய்
சாவிலாக் கலையில் வல்லசற் குருவே
சங்கரா சார்யநற் றவனே. 44

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

பண்டுநற் பெரியோர் பரவுநின் கழலைப்
பாவியேன் பரவுதற் கெண்ணிக்
கொண்டுபுன் மொழியாற் சொற்றன னையா
கோதிலா விரிவுறுங் கடலில்
கண்டபுன் நாற்றக் கழிவுநீ ரதுவுங்
கலத்தலிவ் வுலகினிற் கண்டோம்
சண்டனற் றலையாற் றூழ்சிவப் பழமே
சங்கரா சார்யநற் றவனே. 45

புந்தியா லுன்னைப் புகழுமா தவரைப்
பொருந்திடா தமலநற் கலைகள்
சிந்தியா தடியேன் றீயர்கூட் டுறவாற்
சிந்தைநொந் தலைத னன்றுமோ
நிந்தியா தெவரு நினைக்குமந் தணனே
நெடும்பனை போல்வளர்ந் தேனைச்
சந்தியா திருத்தல் தகுமெனக் கருதாச்
சங்கரா சார்யநற் றவனே. 46

காமமிங் கில்லாக் கடிதவர்க் கருளுங்
கதியினிற் சேர்ப்பினும் பொல்லாப்
பாமர னென்றிரு ளுய்ப்பினு நின்றன்
பதமல ரன்றியொன் றுளதோ
வாமநன் முடியால் வணங்குநற் றேவர்
வாழ்த்திடத் திருவருள் செய்தே
தாமரைக் கழலைத் தந்தவே தாந்த
சங்கரா சார்யநற் றவனே. 47

கரங்குவித் தமரர் காணநின் னடியைக்
கடுந்தவம் புரிகுவ ரென்றால்
உரந்தபுங் கொடிய சிறியனே னுன்னை
யுணருநா ளென்றுகொல் லுரையாய்
வரம்பெறத் துளவோன் வண்டருக் கிறையோன்
வழிபட வளிக்குநற் கொன்றைச்
சரம்பயில் கமலத் தாளுடைத் தலைவா
சங்கரா சார்யநற் றவனே. 48

நயங்கொளுந் தமிழால் நின்றிருப் புகழை
நவிலுவோர் தமக்கருள் பதத்தால்
பயங்கொள நமன்வந் தெனதுயி ருண்பான்
பரிந்திடும் போதுதைத் தருள்வாய்
வயங்கொளப் புலத்தின் வலியைநல் வீட்டின்
வாயிலை யடைகுவான் மதிப்போர்
சயங்கொள வடைதற் களிக்குநல் லாதி
சங்கரா சார்யநற் றவனே. 49

சிந்தையிங் கழிய விழியிணை யிருள
செவிடுபட் டைம்மிக வுந்த
நொந்திட வுயிர்போம் பொழுதுநின் னுருவை
நோக்கிடும் பரிசெனக் கருள்வாய்
பந்தமிங் ககலப் பழவினை கழியப்
பரகதி வேண்டுநற் றவர்க்குத்
தந்திடு மமுதே சாந்தமெய் யுணர்வே
சங்கரா சார்யநற் றவனே. 50

அழற்படு மிழுதி லகங்கனிந் துருகும்
அடியவர்க் குறுகிநல் லன்பாற்
கழற்பணி புரியுங் கருத்துநீ யருளக்
கதியுறு நாளுமிங் குளதோ
நிழற்படு முலகில் நேயமங் ககன்ற
நின்மலா விருவருங் காணத்
தழற்படு முருவாய்ச் சார்ந்ததத் துவனே
சங்கரா சார்யநற் றவனே. 51

விழையுநற் பொருளும் விளங்கிழை மனையும்
விதியுறச் சரிக்குநன் மகவுங்
கழையுநெற் கதிருங் கலந்தநற் புவியும்
கடியபுன் பந்தமென் றகற்றிப்
பழையநற் பெரியோர் பரவிநின் கழலைப்
பரகதி யடைந்தன ரன்றோ
தழையுமின் கலையாற் றயங்குநல் லறவோய்
சங்கரா சார்யநற் றவனே. 52

கனவெனு முலகை நனவெனக்கருதிக்
கண்டபொய்ப் பொருள்களை மெய்யாய்த்
தினமுமிங் கெண்ணித் திரியுமென் றனக்குன்
றிருக்கழல் தந்தருள் சுவையோ
இனமுறும் பேத மதமிழி கயங்க
ளிரிந்திட வபேதநல் லரியாய்த்
தனமெனத் துறவோர் தாங்கமுன் னெழுந்த
சங்கரா சார்யநற் றவனே. 53

பூந்திரை சுருட்டும் புவியிடத் துனையே
பொற்புற வழுத்துநற் றுறவோர்
மாந்தளிர் கவற்று மணிச்சிலம் படியார்
மையலிற் படுவதிங் குண்டோ
பாந்தளின் வாயின் மிகநெருக் குண்ணப்
பட்டுழல் தவளையை யொத்தேன்
சாந்துய ரகற்றிக் கதியரு ளாதி
சங்கரா சார்யநற் றவனே. 54

நிணந்திகழ் வடிவேற் காளையே மலரால்
நெருங்குநற் பாணனே யிமையோர்
கணம்புக ழிறையே யென்றுசெல் வரையான்
கனமிகப் பாடியிங் குழன்றேன்
குணந்திரி யவரைப் புகழ்ந்தபொய் யதனுற்
கொடுநர கேற்கநிற் கின்றேன்
தணந்திடு மோகத் தலைவநல் லாதி
சங்கரா சார்யநற் றவனே. 55

கண்ணினுக் கழகு நின்றிருமேனி
காணுதல் காதினுக் கழகு
பண்ணிறை யிசைக்கு நின்புகழ் கேட்டல்
பழிப்பிலாக் கைகளுக் கழகு
புண்ணியர் வழுத்து நின்கழல் வணங்கல்
போதமென் றெனக்கருள் புரிவாய்
தண்ணருட் கடலே தயங்குநற் கதிரே
சங்கரா சார்யநற் றவனே. 56

ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

அன்றுகோ விந்த னருண்மொழி யேற்ற
வளவிலா நின்றிருச் செவியில்
துன்றுபுன் மதத்தார் சொற்றபுன் மொழியுந்
தோமிலா தேற்றனை யென்றே
இன்றுபுன் கவியா லிசைத்தன னின்னை
யிகழ்ந்திடப் படுவதிங் கென்னே
தன்றிரு வடியார் மயக்கமிங் கறுத்த
சங்கரா சார்யநற் றவனே. 57

பவமிலே னினியா னென்றிறு மாந்து
பரகதி யடைகுவ னென்றே
நவமிகு மடியா ரணியுநல் வேடம்
நாணிலா தணிந்துமிக் குழன்றேன்
அவமிகும் வினையில் நாட்கழித் தந்தோ
அஞ்ஞனு யலைதனன் றுமோ
தவமிகும் பெரியோர் தாழுநற் சரண
சங்கரா சார்யநற் றவனே. 58

நீக்கிய மயலா னிலைத்தநன் னெஞ்சும்
நின்றிருப் பதமதைச் சாற்ற
ஆக்கிய வாக்கு மளித்தடிப் பணியை
யகமகிழ்ந் தியற்றுநல் லுடலும்
போக்கிய புலனுந் தந்தெனை யாள்வாய்
புரந்தரன் பணியுநற் புலவோய்
சாக்கியற் கருளுந் தண்ணளி யுடையோய்
சங்கரா சார்யநற் றவனே. 59

திருக்கறு புலனும் விரிக்குநல் லறிவுந்
திருந்தவ ரினமுநீத் தகன்றே
இருக்குமென் றனையுன் னிருங்கழற் காளா
யேற்றருள் செய்யுநா ளுளதோ
செருக்கறு முனிவோர் தீந்தமிழ்க் கவியாற்
றெளிந்துனைச் சாற்றவங் கருள்வாய்
தருக்கறு புலவா தருமநல் வடிவா
சங்கரா சார்யநற் றவனே. 60

அருந்திறன் ஞான வாட்படை யதனு
லருவினைக் காட்டினை யெறிந்து
வருந்திடு மடியேன் பத்திவித் திடுவான்
மனப்புவி திருத்துநா ளுளதோ
திருந்தவர் சூழத் திசையெலாஞ் சரித்த
தீரனே திருவுடன் கல்வி
தருந்திருத் தேவே சற்சனர்க் குறவே
சங்கரா சார்யநற் றவனே. 61

கரணமும் புலனுங் கலந்தினி தொன்ருய்க்
கடிதுன தடிமலர் காணத்
திரணமா யுலகைத் தேர்ந்தநற் குரவா
செய்தெனைத் திருத்தியிங் காள்வாய்
மரணமும் பிறவித் துயருமிங் கில்லா
வள்ளலே வானவர் தமக்குஞ்
சரணமிங் களித்துக் காத்தசற் குணனே
சங்கரா சார்யநற் றவனே. 62

செக்குறு திலத்தின் பிறக்குமத் துன்பத்
தெண்மடங் கதிகமா மிறப்பிற்
புக்குறும் பொழுதென் றிசைத்தனர் பெரியோர்
புலையனேன் பிறப்பினி னீங்க
நெக்குற நெஞ்சம் நின்றிருக் கழலை
நெருங்குநா ளென்றுகொல் லுரையாய்
தக்கவர் புகழுந் தனிப்பெருந் தலைவா
சங்கரா சார்யநற் றவனே. 63

ஊழுறும் பொழுதுமற் ருென்றனைச் சூழ
வொழிவிலவ் வூழ்வலி மிகுந்தே
பாழுறப் பண்ணு மென்றுபொய் யில்லாப்
பழங்குற ளிசைக்குமற் றதனல்
வீழுற வூழை விலக்கநின் னடியை
வேண்டினேன் வெவ்வினைக் கொடியேன்
தாழுறு மவர்க்கே தந்தசெஞ் சரண
சங்கரா சார்யநற் றவனே. 64

கனலெனக் கொடிய வினைபல வியற்றுங்
கயவரைக் கழன்றுநின் னடியைப்
புனல்கொடு விளக்கிப் புதுமலர் தொடுத்துப்
பூசனை புரியுநா ளுளதோ
சினமுத லிழிக்குங் குணமிலார் வழுத்துஞ்
சிதைந்தபுன் மயக்கநற் றிருவே
சனனமிங் கறுத்துத் தீவினை யகற்றுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 65

யாதனி னியாதனி னீங்கியா னேத
ல்தனினெய் துவதிலைத் துன்பென்
றோதிய புலவ னெண்மொழி யோரா
துலகுறும் பொருள்களுக் கெல்லாம்
ஏதமில் யானே யிறைவனென் றுன்னு
மிச்சையி னீங்குநா ளுளதோ
சாதகர்க் கருளுஞ் சாந்தசற் குணனே
சங்கரா சார்யநற் றவனே. 66

தெய்வநன் மதுரச் செழுந்தமிழ் மறையைச்
செவியுறக் கேட்கிலா தவமே
மெய்யுற விரிக்கும் வெற்றுரைக் கதைகள்
விரும்பியே யுழன்றனன் சிறியேன்
பொய்யுறும் பொருளிற் பொழுதுபோக் கில்லாப்
புண்ணிய ரேத்துநல் லிறையே
சைவநல் முனியாய்த் தயங்குநல் லாதி
சங்கரா சார்யநற் றவனே. 67

மூடபுல் லிருளைப் போக்கிடற் குன்னை
முதுமறை மொழியினாற் போற்றி
ஏடவிழ் மலரா லேத்துநல் லடியா
ரினத்தினி லெற்கிட முண்டோ
பாடுறத் திசையோர் பரவநல் விசயம்
பண்ணிடுங் கண்ணினன் மணியே
தாடலைத் தருவான் வந்தசற் குருவே
சங்கரா சார்யநற் றவனே. 68

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

குருப்பிரா னடியி லுடல்பொரு ளாவி
கொடுத்தவ னருள்பெறு மவர்க்கே
இருப்பொளி யின்பா யிலகுநற் பிரமத்
திருந்துல கனைத்துமங் கிலதாய்
உருப்பெறு கயிற்றிற் பாம்பெனத் தோற்றி
யொடுங்குமென் றுணர்த்துநற் குரவா
தருக்கடை மதத்தர் தாழவங் கருள்செய்
சங்கரா சார்யநற் றவனே. 69

குலமதி லுதித்துங் குறைவிலா நூல்கள்
கோதிலா துணர்ந்துநல் விரதப்
பலமதி லுயர்ந்தும் பழவினை யிரிந்தும்
பழுதிலா நின்னடி யவர்க்கு
நலமதிற் பூசை யியற்றிலார் கதியின்
நண்ணுத லென்றுகொல் லுரையாய்
தலமதிற் பெரியோர் தாழுநற் றலைவா
சங்கரா சார்யநற் றவனே. 70

பாத்திய மணியால் விளங்குநன் முடியும்
பரவுவா ரீட்டநாற் புறமும்
வாத்திய முழக்கும் நால்வகைப் படையும்
வளந்தர வாழ்ந்தகொற் றவரும்
ஏத்திய மொழியா லிரக்குமிவ் வுலக
வியல்பினை யறிந்துனை யடைந்தேன்
சாத்திரப் பொருளைத் தரித்தநற் குரவா
சங்கரா சார்யநற் றவனே. 71

விழைவுடன் கலைகற் றுய்கவென் றுரைத்த
விதியினைப் பாலுண வழைத்துங்
குழையுறு வேம்புண் ஒட்டையின் வெறுத்துக்
கூறுமென் பவமொழிந் திடுமோ
மழைமதர்க் கருங்கண் வனிதைநன் மக்கள்
மண்முத லுளவெலா மொருங்கே
தழைவுறும் பந்த மென்றெணித் துறந்த
சங்கரா சார்யநற் றவனே. 72

கானமே திரியுங் கடைவிலங் கதனிற்
கடையனேன் கற்பன கற்று
ஞானமே அடையேன் நல்லவர் கூட்டம்
நணுகிலே னுய்யுநா ளுளதோ
வானமே மருவுங் கடவுளர்க் கருள
வந்தனை யெனினுநின் கழலைத்
தானமா யருள வேண்டினே னென்னையாள்
சங்கரா சார்யநற் றவனே. 73

கூம்புறு கரமு மலர்ந்தநன் முகமுங்
கொடுநினை யேத்துநற் பெரியோர்
தேம்படு சரண மலர்ப்பொடி யடியேன்
றீவினை யுடற்படிற் பவம்போம்
மேம்படு ஞான மேவியங் கதனல்
மேற்கதி யடைகுவ னந்தோ
சாம்பொழு தெனக்குன் றண்ணரு ளளிப்பாய்
சங்கரா சார்யநற் றவனே. 74

கந்தரம் புகுந்துங் கடுந்தவம் புரிந்துங்
காலையங் கடக்கினு ரெனினும்
அந்தரந் திரிந்தே யரியநற் சித்தி
யளவிலா தியற்றினு ரெனினும்
இந்திரன் வழுத்தும் நினையுண ராதா
ரிழிபவ மிரியுமோ வுரையாய்
சந்திரன் றணந்த திருமுடித் தலத்தோய்
சங்கரா சார்யநற் றவனே. 75

தோற்றுவெம் பிறவிப் பெருங்கடல் வீழ்ந்து
துயர்மிகும் பிணியலை யலைப்பக்
காற்றெனை யகலும் பொழுதுநின் கழலைக்
கண்டிடற் கருள்புரிந் திடுவாய்
நீற்றினை யணிநல் லடியவர் நேயம்
நீங்கிடா திருக்கநன் மொழியைச்
சாற்றுதற் கெழுந்த தலைவநல் லாதி
சங்கரா சார்யநற் றவனே. 76

நீரினுற் றழலால் நெருங்குபுன் பிணியால்
நிதிகவர் கள்வரா லரசாற்
பாரினில் வருந்து மவரலர் நினது
பாதமே தொழுதிடு மடியார்
சீருலாந் தவத்தோர் சேர்ந்துவா ழிடமே
சிறியனேற் கருளிநற் றும்பைத்
தாரினுற் பொலியும் நின்கழல் தருவாய்
சங்கரா சார்யநற் றவனே. 77

துன்னுறும் பிறவித் துயரமிங் கொழியத்
தொல்கதிக் கெனையழைத் திடினும்
இன்னலுற் றிங்கே யிறப்பொடு பிறப்பா
விளைத்திடற் கமைத்தனை யெனினும்
நின்னடிக் கமலம் விட்டுமற் றவரை
நினைப்பனோ வுரைப்பருந் தவனே
தன்னிடத் திமையோர் தாழவீ டருளுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 78

சினமுறு முளமில் விருவினை யகன்ற
திருந்தவ ரவையிலென் றனையும்
மனமுற விருத்தி மலிபகை யிருளை
மாற்றியெற் கருளுநா ளுளதோ
கனமுறும் பெரியோர் சரித்தநன் னெறியிற்
கடையனேன் சரிக்குமா றருள்வாய்
தனமெனப் புவியோர் தாங்குநல் லடியாய்
சங்கரா சார்யநற் றவனே. 79

தொகைமிகு முனிவர் சூழ்ந்துநிற் பரவி
தொழுதிடும் பொழுதுனைக் காணும்
பகைமிகும் பேதப் பகைவரும் பணிந்து
பத்தரா யேத்துதல் கண்டு
நகைமிகு முலக குருவெனப் பெரியோர்
நவின்றன ரெனமிக வுணர்ந்தேன்
தகைமிகு மமரர் தலைவனுக் கருளுஞ்
சங்கரா சார்யநற் றவனே. 80

ஒழுக்கமு மருளுஞ் சால்புமின் சொல்லு
மொண்கொடை யடக்கமுன் குணங்கள்
வழுக்கிலா தருளி நின்னடித் தொண்டை
வழங்குநா ளென்றுகொல் லுரையாய்
அழுக்கிலா வுளத்தார்க் கருளுநின் னடிக
ளன்பிலா தென்புதோல் போர்த்த
சழக்கனேற் கருளு மாறெவன் சொல்லாய்
சங்கரா சார்யநற் றவனே. 81

வினைவழி யுலகில் விதித்திடு போகம்
விரும்பியிங் குண்பவர் தமக்கே
நனைமலர் புனையுன் றிருவடித் தலத்தில்
நண்ணுமா றுளதென வுணர்ந்தேன்
தினையள வெனினுஞ் செய்தவர்க் களியாத்
தீதுறுஞ் செல்வரிங் குணராத்
தனையுணர் ஞானஞ் சார்ந்தசற் குருவே
சங்கரா சார்யநற் றவனே. 82

இரும்பெனு முளத்தா லெளியவர்க் கீயா
விழிதகை யினரைநற் றருவே
கரும்பினுஞ் சுவைக்குங் கனிந்தநன் மொழியோய்
கட்டழ குடையநன் மதனே
பெரும்புலத் தவனே யென்றுசெந் தமிழாற்
பேசியிங் குழன்றன னந்தோ
தருங்கதித் தலைவா தமியனென் செய்வேன்
சங்கரா சார்யநற் றவனே. 83

மின்னவிர் முகமண் டலமுமங் கருள்கூர்
விழிகளுந் திருச்செவி யழகும்
இன்னலில் மொழியா லிலங்குநல் வாயு
மேத்துவார்க் கருளுநற் கழலும்
கன்னவில் மனத்தாற் கலங்குறு மடியேன்
காணுத லுண்டுகொல் லுரையாய்
தன்னைமின் னுலகந் தாழவந் துதித்த
சங்கரா சார்யநற் றவனே. 84

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

சொன்னநற் றுவிதந் தோமிலத் துவிதந்
தொகுத்தவிவ் விரண்டினிற் றாய
முன்னமர் ஞானம் பின்வரு ஞான
முறப்பெறு முதவியாய் முடிவில்
பன்னுறும் பேதப் பிராந்தியுற் றொழியப்
பழுதிலத் துவிதமே யழியாத்
தன்னையிங் களிக்கு மென்றுவாய் மலர்ந்த
சங்கரா சார்யநற் றவனே. 85

ஏனுறும் பெரியோ ரிசைக்குநின் கழலை
யிருளொடு மிடைந்தபுன் மனத்தேன்
நாணமில் முறையா னவிலுதல் கேட்கின்
நலங்கிளர் குயிலிசைக் கெதிரே
கோணுபுன் குரலாற் கொடிகரைந் திடுதற்
கொக்குமுன் னிருவருந் தொழவே
தாணுவா யெழுந்த தலம்புகழ் குருவே
சங்கரா சார்யநற் றவனே. 86

கரையிலாக் கருணைக் கடலெனக் கருதிக்
கடுந்தவப் பெரியவர் நின்னைப்
புரையிலாப் பிறவா நெறிதனை வேண்டிப்
போற்றினர் அடியனேற் குன்றன்
குறைகழற் றமிழா லிசைக்குமா றுளதேற்
கொடும்பவத் திடும்பையே வேண்டும்
தரையிடைக் குருவாய்த் தயங்குநற் பெரியோய்
சங்கரா சார்யநற் றவனே. 87

ஆண்டுபற் பலவா யாவியோ டுறினு
மன்றியிக் கணமுடல் விடினும்
பூண்டநல் லுடலும் பொருளுயிர் மூன்றும்
பொருவிலா நின்கழற் காக்கும்
மாண்டநற் பத்தி யெய்திடி னன்றே
மாசிலா மணிப்பெருந் தகையே
தாண்டுபுன் பிறவி வேண்டுநல் லிறையே
சங்கரா சார்யநற் றவனே. 88

கூர்ந்தவன் பொடுநின் குரைகழல் வழுத்துங்
  கோதிலா வருந்தவர்க் கன்றி
நேர்ந்தவை துய்த்தே யுழலுமென் றனக்குன்
  நேரிலா வருள்கிடைப் பதுவோ
சேர்ந்தநற் கலையாற் றிகழுவா மதிபோற்
  றிகழ்முக மண்டலத் தரசே
சார்ந்தமெய்ஞ் ஞானத் தவத்தினர் வழுத்துஞ்
  சங்கரா சார்யநற் றவனே. 89

விருப்புடன் வெறுப்புற் றிருந்துபொய் யுலகை
  மெய்யெனக் கருதுமென் றனக்குன்
றிருப்பத மிறைஞ்சுஞ் சிறப்புமிங் குளதோ
  செய்பெருந் தவமுடைத் திருவே
கருப்புகுஞ் சிறுமை கழன்றநற் றுரையே
  கைதவர் காணொணுப் பொருளே
தரிப்பருங் கருணை மழைபொழி முகிலே
  சங்கரா சார்யநற் றவனே. 90

சத்தியம் பிரம சரியநற் கருணை
  தனிப்பெருஞ் சாந்திமுற் குணங்கள்
நித்தமிங் ககலா நெடுந்தவப் பெரியோர்
  நெஞ்சநல் லிடமெனக் கொள்ளும்
மெத்துநின் னடிகள் வெவ்வினைக் கொடியேன்
  மெலிவுறு மனமிடங் கொளுமோ
தத்துவ முணர்த்தித் தமியனை யாள்வாய்
  சங்கரா சார்யநற் றவனே. 91

நண்ணருந் திருவே ஞானநல் லமுதே
  நம்புநர் வெம்பவ மகற்றும்
எண்ணரும் பெரியோ யேதமில் துறவோ
  யிழுக்கிலா வொழுக்கமிக் குடையோய்
கண்ணுறுங் கவிஞெய் கஞ்சநல் லடியோய்
  கதியருள் கற்பக மென்றே
தண்ணறுங் கவியாற் சாற்றுவார்க் கருளுஞ்
  சங்கரா சார்யநற் றவனே. 92

## ஸ்ரீ ஆதி சங்கரர் அன்பு மாலை

இனியபைந் தமிழின் இசையினுக் குருகு
மெந்தையே யென்மனக் கருங்கல்
கனியநற் றமிழின் கலையெலா முணரக்
கற்றுனைச் சாற்றுமா றருளாய்
துனியகல் துறவோர் தொழுதிடுந் தூயோய்
தொல்கதித் தலைவனும் மறையோய்
தனியனை யனையோய் சங்கையில் லறவோய்
சங்கரா சார்யநற் றவனே. 93

சந்தமிக் குறவே சாற்றநல் வாயுந்
தண்கழல் தாழநற் றலையும்
பந்தமிங் கிரியக் கூப்புநற் கரமும்
பாடுறும் பூசனை புரிய
நந்துநன் னீரும் மலருமிங் கிருக்க
நாயினே னலிவுற னலமோ
தந்திநல் லுரியைத் தணந்தநற் சிவமே
சங்கரா சார்யநற் றவனே. 94

கருத்தினில் நினது கருணையம் மேனி
காணவு மைந்தெழுத் தியம்பிச்
சிரத்தினிற் குவித்த கரத்தொடு நினையான்
செபிக்கவு மிங்கெனக் கருள்வாய்
திரத்துடன் றுறவு சேர்ந்தநற் றுறவோர்
திருமுடி தாழ்த்தவங் கருள்கந்
தரத்தினி லிருளைத் தணந்தசற் குருவே
சங்கரா சார்யநற் றவனே. 95

நீரினி லெழுபுன் குமிழியின் விரைந்து
நிலையிலா தழியுமிவ் வுடம்பைப்
பாரினிற் கதியென் றுழலுமிக் கொடியேன்
பரகதி யடையுநா ளுளதோ
ஏரியல் கழலை யேத்துமுத் தமருக்
கெவ்வமில் கதியளித் திதழித்
தாரினற் பொலியுந் திருமுடித் தேவே
சங்கரா சார்யநற் றவனே. 96

மயலினால் வளரஞ் ஞானமா மளற்றை
மயலிலா நின்றிரு வருளாம்
வெயினா லுலர்த்தி யெனதுவெம் பிறவி
விலக்குநற் கடவுணீ யலையோ
துயிலுநல் லுறவுந் துறந்தநல் யோகர்க்
குதவநல் வீட்டினைக் கயிலைச்
சயிலநீங் கிங்ஙன் சார்ந்தசின் மயனே
சங்கரா சார்யநற் றவனே. 97

குடைநிழ லமர்ந்தே குஞ்சர மூர்ந்தோர்
கொடுப்பதற் கொருவ ரில்லாமல்
நடைமெலிந் துணவை நாடுமா றுழன்றூர்
நம்பனே யிவ்வுல கியற்கை
தடையிலா துணருந் தவர்புகழ் முனிவோர்
தலையினற் றுழவந் தருளுஞ்
சடைதணந் தவனி சார்ந்தநல் லாதி
சங்கரா சார்யநற் றவனே. 98

புரத்துறு மவுணர் பூங்கணை மதவேள்
பொடிபடச் செய்நகை நோக்கைச்
சிரத்தினி லமைத்த கரமுடைச் சிறியேன்
சிறுமலம் பெறுவதெந் நாளோ
கருத்தினாற் கருத வரியநுண் ணியனே
கருதவிப் புவியினில் வடிவந்
தரித்தமெய்த் தவனே தண்ணருட் சுடரே
சங்கரா சார்யநற் றவனே. 99

நீங்கருந் துயராற் பிறக்குமிப் பிறவி
நீங்கிடத் தனையுணர் ஞானந்
தேங்கநின் னடியைச் சிறியனேன் நாளுந்
திருந்துறக் கருதவிங் கருள்வாய்
ஓங்குமெய்ஞ் ஞானத் தண்டநற் கரக
முயர்திரு நீறுகண் மணியைத்
தாங்கு நன்மேனி சார்ந்தநற் பரனே
சங்கரா சார்யநற் றவனே. 100

ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாசாரியர் திருவடிகளே சரணம்.

சற்குரு திருவடி வாழ்க!

முற்றிற்று.

உ

# தருக்க வேதாந்த போதகாசிரியர் திருமிகு, ஆ. செங்கல்வராய முதலியார் அவர்கள், பரிசோதித்த நூல்களும், உரைகளும்.

---

1: நாஞசிவ வாதக் கட்டளை (இலகு போதினி என்னும் உரை) ... 0 6 0

2. சசிவன்ன போதம் (தத்துவப் பிரகாசிகை என்னும் உரை) ... 1 8 0

3. மகாராசா துறவு மூலம் ... 0 3 0

4. இலக்ஷணவிருத்தி மூலம் ... 0 4 0

---

## அடுத்து வெளிவரும் நூல்கள் :

1. வேதாந்த சூடாமணி மூலமும், உரையும்.
2. தருக்க சங்கிரக நியாய போதினி உரை.
3. ஈஸ்வர கீதை மூலமும், உரையும்.
4 ஸ்ரீமத் பகவத்கீதை மூலமும், கருத்துரையும்.

---

இடைக்குமிடம் :

பு. கா. கங்காதர முதலியார்,

செயலாளர்.

வேதாந்தத் தமிழ் வாசகசாலை,

குடியேற்றம் (N. A. Dt.)

விக்டோரியா பிரஸ், வேலூர்.